உ
குருவே துணை.



# எழுபா எழுபஃது

பொய்கைப்பாக்கம்

# திருமால் பதிகம்.

---


நூலாசிரியர் :

வண்ணச்சரபம் - அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்.





தண்டபாணி சுவாமிகள் நூல் வெளியீட்டுக் குழுவினர்

பதிப்பு - 7


வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

73-வது குருபூசை விழா

இலட்சார்ச்சனை வழிபாட்டு விழா

நினைவு மலர்.

1971

திருவாமாத்தூர்க் கௌமார சபை வெளியீடு 115.

உ
குருவே துணை.

# எழுபா எழுபஃது

## பொய்கைப்பாக்கம்
## திருமால் பதிகம்

---

நூலாசிரியர் :
மகான் – வண்ணச்சரபம்
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும்
**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**
திருவாமாத்தூர்.

பொய்கைப்பாக்கம் ஊராட்சிமன்றத் தலைவரும், பெருநிலக்கிழாருமான
**திரு. T. S. இராமநாதன் அவர்கள்**
பொருளுதவிகொண்டு பதிக்கப்பெற்றது.

---

வண்ணச்சரபம்
**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**
**73-வது குருபூசை விழா**
**இலட்சார்ச்சனை வழிபாட்டு விழா 10—7—71ல்**
**நடைபெற்றபோது**

மயிலம், பொம்மபுர ஆதீனத் தலைவர் 19-வது பட்டம்
குருமகா சந்நிதானம்
**சிவத்திரு. சிவஞான பாலய சுவாமிகள் தலைமையில்.**

திருவாமாத்தூர் – கௌமார மடாலயத் தலைவர்
**தவத்திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்களால்**
வெளியிடப்பெற்ற

**நினைவு மலர்.**

உ
குருவே துணை.

# முன்னுரை.

---

தொழுமா தவர்க்கினிய தூயதமிழ்ப் பாவார்
எழுபா எழுபதெனும் இந்நூல் – வழுவாச்சீர்
நெல்லைநகர்த் தண்டபா ணித்தவன்சொற் ருனடியார்
எல்லையிலின் பம்பெருக வே.

"எழுபா எழுபஃது" என்ற இந்நூல், ஏழுவித யாப்பினாலான பாக்கள், ஏழு சேர்ந்தது என்ற பொருளமைந்துள்ளது. ஆதிமுதல் இறுதிவரை அந்தாதித் தொடரால் அமைந்துள்ளது. எழுபா என்பது, ஏழுவித யாப்புடையதென்பதையும், ஏழு பாக்களும் ஏழுவிதக் கடவுளைப்பற்றி, ஏழு பத்து அடுக்கடுக்காக அமைந்திருப்பதையும் தெரிவிக்கின்றது.

கடவுள் ஒன்றேயாயிருக்க, ஏழு கடவுளைத் துதிப்பது ஏன்? தெய்வமொன்றென்ற உண்மையறியாமல் பாடியதோ என்ற ஒரு ஐயம் எழுவது இயல்பு. கடவுள் ஒன்றேயென்பது எவரும் கூறிய – அறிந்த ஒன்றென்பதில் ஐயமில்லை. கடவுள் ஒன்றே–வழிபடும் அன்பர் மனநிலைக்கேற்ப, ஆறு குணங்களையுடைய, பரம்பொருளொன்றை, ஆறு கடவுளாக உருவகித்துள்ளனர். அவை சூரியன், சிவன், சத்தி, திருமால், கணபதி, முருகன் என்ற ஆறும், இவற்றுக்கு அப்புறப்பட்ட பொதுவான பரம்பொருள் ஒன்றும் ஆக சமயம் ஏழாயின என்பது ஆன்ருேர்கண்ட முடிவு. கிழமைகள் ஏழும் இம்முறையிலமைந்துள்ளன.

அனந்த பேதத்(து) அறுவகைச் சமயமும்
அவைமுழு தொருவலும் தழுவலு மாகும்
அதீத மொன்றும் ஆய ஏழும்
வழிபடற் பொருட்டே வாரமே ழாயவே. – என்று "சத்திய சூத்திரம்" என்ற நூலில் இந்நூலாசிரியர் கூறியுள்ளார்.

ஞாயிறு — சௌரம் — சூரியன்
திங்கள் — சைவம் — சிவன்
செவ்வாய் — சாத்தேயம் — சத்தி
புதன் — வைணவம் — திருமால்
வியாழன் — காணுபத்தியம் — கணபதி
வெள்ளி — கௌமாரம் — முருகன் (குமாரன்)
சனி — சமயாதீதம் — பொது (குரு)

என்றபடி கிழமையின் முறையும், கடவுளியல்பும் அமைந்துள்ள

அருமை பொருத்தமாயுள்ளது. இனி இக்கடவுள் ஆறும் ஒரே பரம் பொருளின் ஆறு குணங்களேயாம். என்பதனை,

1. சூரியன்–ஒளித்தன்மை
2. சிவன்–ஒடுக்குந்தன்மை
3. சத்தி–உதவுந்தன்மை
4. விஷ்ணு–காக்குந்தன்மை
5. கணபதி–இடையூறகற்றல்
6. குமாரன்–ஞான உபதேசம் செய்தல் (உண்மையுணர்த்தல்)

என்று பொதுக்கடவுளான பரம்பொருள் ஒன்றின் ஆறு குணமேயாம். வெவ்வேறல்ல என்ற கருத்தை விளக்கும் கவி காண்க.

பரம்பொருளின் பிரகாசம் பரிதிப் புத்தேள்
பலவுலகும் ஒடுக்குகின்ற பண்பே யீசன்
கரந்தவற்றை உதவுவது சத்தி, யாவும்
காப்பதுமால். அடியவர்தாம் கருதும் செய்கைக்கு
உரங்கொடுத்து முடித்திடுதல் கணேசன், ஞான
உபதேசம் புரிந்திடுதல் ஒள்வேற் கையான்
வரம்பெறுமட் டுபாசித்துப் பெற்றோர் இந்த
வகையறிவார் மற்றையர்க்கு வம்பாம் அன்றே.

என்றருள்வார் இந்நூலாசிரியர் கௌமார முறைமை நூலில்.

ஆகவே பரம்பொருள் ஒன்று. அதன் குண வகையான சமயம் ஆறு. ஆக ஏழு என்ற வரிசையில் சூரியன், சிவன், சத்தி, திருமால், கணபதி, முருகன், பொது என்ற ஏழு தெய்வ நிலைகட்கிசைய ஏழு கவிகளை ஏழு யாப்பில் ஏழு அடுக்கிற் பிணைத்துத் தொடர்புற அந்தாதியாக தமதநுபூதியிற்கண்ட முறைப்படி கூறியுள்ளனர் இந் நூலாசிரியராகிய தண்டபாணி சுவாமிகள்.

இதுபோன்று, ஏழாயிரப்பிரபந்தமென்றுள்ள நூல் ஒன்று. ஞாயிறு முதல் சனியீருகவுள்ள ஏழு கிழமைகளில் நாள் ஒன்றுக்கு மேலே கூறிய முறைப்படி ஒவ்வொரு பதிகமாக நூறு பதிகம் ஒவ் வொரு சமயத்துக்கும் ஆயிரம் பாடல்களாக இயற்றினர். "சமய சூத்திரம்" என்ற நூலும், ஏழு சமயங்களின் பரத்துவ உண்மையை ஏழு ஏழு சூத்திரங்களிலியற்றியுள்ளார். இது கௌமார சரித்திர நூல்களில் ஒன்ருகும். "திருப்பொதுச் சூத்திரம்" என்பதும் சாத்திர வகையினது. ஒவ்வொரு அகவலாக ஏழு சமயத்துக்கும் ஏழு சூத்திர முடையது. இப்படி ஆறு சமயக்கடவுளும் அதீதமும் ஆக ஏழு சமயம் கூறினர். சமயம் ஆறே என்பதை, திருமுறைகளிலும் பிறரும் கூறப் பட்டிருக்கிறது. சமயங்கடந்த பரம் ஒன்றைத் தனியே போற்றினர். ஆறு சமயக் கடவுளரும் அகண்ட பரத்தினின்று தோன்றி, அதி லேயே ஒடுங்கும். நெருப்பு அருவமாயுள்ளது. இருபொருளின் சேர்க்கையால் வெளிப்பட்டு, உருவின்றி மறைகிறதுபோல, உபாசகன் பொருட்டு அருவபரம் உருக்கொண்டு அருளி மறைந்த தாகவே வரலாறுகள் கூறுவதறியலாம்.

இவ்வநுபவத்தைப்பெற்ற நூலாசிரியர், வண்ணச்சரபம் – அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் இந்நூலை இயற்றியுள்ளனர். முருகப்பெருமானுக்குமட்டும் சந்தப்பாடலாகவே பாடினர். சந்த இலக்கண ஆசிரியர் சுவாமிகள். பாடல்களில் அந்தந்த சமயக் கடவுளரின் அருளாற்றல் வரலாறு, தன் அநுபவம் இவை கலந்துள்ளமை அன்பர்களறியலாம்.

இதன் ஈற்றில், பொய்கைப்பாக்கம் திருமால் பதிகமொன்று இணைக்கப்பட்டுள்ளது. அதுவும் தண்டபாணி சுவாமிகள் இயற்றியதேயாம். அதற்குமட்டும் பொருள் எழுதப்பட்டுள்ளது. முன்னுள்ள நூலுக்குக் குறிப்புரை எழுதப்பட்டுள்ளது.

எழுபது பாடல் நூல், காப்பு, ஈற்றுச்செய்யுள் ஆக 2. ஏழு சமயம் இவையென்பதைக் கூறும் சுவாமிகள் பாடல் 1 சேர்த்து மொத்தம் 73 கவிகளாக்கி, 73-வது குருபூசை மலராக வெளிவருகிறது ஒரு பொருத்தமாமென்க.

இவ்வருமைநூலை அருளிய மகான் வண்ணச்சரபம்-தண்டபாணி சுவாமிகள் 1839-ல் திருநெல்வேலியில் தோன்றினர். கருவிலே திருவுடையவரான இவர், இளமையிலேயே வேற்பூசை செய்து, ஆறெழுத்தை உருவேற்றினர். இதன் பயனைப் புதிய கவிதைகள் பல இயற்றும் வண்மை படைத்தார். பலதல வழிபாட்டை மேற்கொண்டார். சமயபேதமற்ற கொள்கையினர், சாத்திர, தோத்திர நூல்கள் பல அருளினர். புலவர் புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம்போன்ற பல நூல்களை இயற்றினர். தாமியற்றிய நூல்களைத் தாமே பனையோலைச் சுவடியில் எழுதினர். இம்முறையில் இவர் எழுதிய லட்சம் பாடல்களில் தற்போது ஐம்பதாயிரத்துக்கும் மேம்பட்ட பாடல்கள் உள்ளன. அவைகளில் ஒரு பகுதியே இந்நூல் என்பது குறிப்பிடத்தக்கது.

இதனைப் பதித்து வழங்கும் பணியில் ஈடுபட்டுத் தன் பொருள் கொண்டு பதித்தவர் பொய்கைப்பாக்க ஊராட்சிமன்றத் தலைவரும், பெருநிலக்கிழாரும், தமிழன்பருமான திரு. T. S. இராமநாதன் அவர்கட்கும், இவர்மூலம் இந்நூலை வெளியிடுவதில் ஆர்வம் காட்டிய விழுப்புரம், முன்னாள் நகர்மன்றத் தலைவரும், ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் நூல் வெளியீட்டுக் குழுத்தலைவருமான டாக்டர் திரு. து தியாகராசன் அவர்கட்கும், சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து படித்துப் பயனுணரும் அன்பர்கட்கும் அறுசமய சாத்திரப் பொருளான திருமுருகப்பெருமான் திருவருள் பெருகுவதாக.

நூலாசிரியர் பெயரர்

விழுப்புரம்,
10—7—'71.

தி. செ. முருகதாச ஐயா,
கௌமார மடத்தலைவர்,
திருவாமாத்தூர்.

# பதிப்புப்பாயிரம்.

கதிரவன், ஈசன், சத்தி, காகுத்தன், கணேசன், செவ்வேள்
பொதிபுகழ்ச் சமயா தீதப் பொது, எனும் சமயம் ஏழின்
துதிவகை தண்ட பாணித் தூயவன் சொலுமிந் நூலை
நிதியெனப் பதித்தான் சொந்த நிதிபெறும் பயனீ தாமே. 1

ஏழுபா வினத்தி னாலே ஏழெனும் சமயத் தேவை
ஏழுறும் அடுக்குப் பத்தால் எழுபது பாட்டும், முன்பின்
சூழுறு கவியும், ஏழாய்ச் சொல்கட வுளின்பா வும்சேர்ந்(து)
ஏழுதோய் பத்து மூன்று யிலங்கிடு மிந்நூற் பாவே. 2

தண்பா ணிப்பே ரண்ணல் தன்குரு பூசை யாகக்
கொண்டவி ரெழுபான் மூன்றுக் குலவிடு மிந்த நாளில்
விண்டபா எழுபான் மூன்றில் விளங்குமிந் நூலைத் தந்தான்
புண்டரீ கன்றுள் போற்றும் புகழ்ராம நாதன் றனே. 3

பார்புகழ்ந் திடும்நற் பொய்கைப் பாக்கம் வாழ் நெடிய மாயன்
சீர்திகழ் பதிக மொன்றும் சேர்த்தச்சிற் பதித்துத் தூய
நார்பெறு முளத்தி **ராம நாத**னும் பெயர்தோய் நல்லோன்
சேர்பெரு நிலக்கி மூாராய்த் திகழ்பவன் வாழ்க மாதோ. 4

சமயமோ ரேழு மொன்றும் தனதநு பவத்தைக் கொண்ட
சிமயநேர் தண்ட பாணித் திருப்புகழ் முருக தாசன்
விமலமார் கவியை யச்சில் விரும்பிச்செய் **ராம நாதன்**
தமர்மனை மக்க ளோடு சந்ததம் வாழ்க மாதோ. 5

இன்னணம்,

கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர் P. O.
(வழி) விழுப்புரம்.

**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்.

இந்நூலைத் தமது பொருள்கொண்டு பதித்து வழங்கிய
பொய்கைப்பாக்கம் ஊராட்சிமன்றத் தலைவரும், பெருநிலக்கிழாருமாகிய

**திரு. T. S. இராமநாதன் அவர்கட்குப்**

## பாராட்டு வாழ்த்து.

---

செந்தமிழ்ப் பாண்டித் திருநா டதனில்
வந்தநெல் வேலி மாநகர்த் தோன்றிய
தண்டபா ணிப்பேர்த் தமிழ்ப்பெரும் புலவர்
விண்டபன் னூலுள் விளங்கி, ஏழாம்
சமயக் கடவுளர் தந்துதி யாகி
ஏழுபா வினத்தில் இலங்குபத் தடுக்கில்
எழுபது பாட்டில் இலங்குமிந் நூலைக்
கண்டு மகிழ்ந்து கவனுமப் பெருமான்
எழுபான் மூன்ருய் இயல்குரு பூசையில்
பதித்து வெளியிடும் பண்புடை யவன்ருன்
என்மீ தென்றும் ஏற்றமெய் யன்பன்,
சொற்படி நடக்கும் தூயவுள் ளத்தன்,
விளம்புமென் னுரைப்படி விரும்பியிந் நூலைப்
பதிக்கவுள் ளிசைந்த பாங்குறும் இனியன்,
பொய்கைப் பாக்கமாப் பொருந்தும்நன் னகரில்
மாயவன் தாள்தொழும் மறையவர் குலத்தில்
வந்தவன், பெருநில வளமை யுடையவன்,
ஊராட்சி மன்றத் துற்றநற் றலைவன்,
செந்தமிழ், ஆரியம் ஆங்கிலம் தேர்ந்த
கல்வி யாளன், கவின்பி.எ. பட்டம்
பெற்றுத் திகழும் பெருமையிற் சிறந்தோன்,
யாவ ரிடத்தும் இனிமையாய்ப் பழகுவோன்,
மதபேத மற்ற மாண்புறும் உளத்தினன்,
இன்பார் நண்பன் **இராம நாதனும்**
அன்பன், சுற்றமும் அவிர்மனை மக்களும்
சூழ்ந்து திகழத் துலங்குபல் நலமுடன்
பல்லாண்டு வாழப் பரிந்துவாழ்த் துதுமே.

அன்பன்,

**டாக்டர் - து. தியாகராசன்,**
முன்னாள் நகர்மன்றத் தலைவர்,
தண்டபாணி சுவாமிகள் நூல் வெளியீட்டுக்
குழுத் தலைவர்.

விழுப்புரம்,
10—7—71.



மகான் – வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்.**

உ
குருவே துணை.

# எழுபா எழுபஃது.

### காப்பு - வெண்பா.

தொழுவார்க் கருள்வழங்கும் சோதியொன்றை நாடி
எழுபா எழுபஃ(து) இயம்ப – வழுவாத
ஆறு நெறியாய் அதீதநிலை யாங்குரவன்
வீறுதுணைத் தாட்டுணையா மே.

## நூல்

### வெண்பா - சூரியன்

பரிதிப் பழம்பொருளே! பல்சமயத் தோரும்
பெரிதிறைஞ்சும் ஞானம் பிழம்பே! – எரிதிகிரி
மாலாம் எனப்புவியோர் வாழ்த்தமகிழ்ந்(து) யானுனது 1
பாலாகு மாறருட்கண் பார்.

### கட்டளை கலித்துறை - சிவன்

பார்த்தன்கை வில்லடிக் கந்நாள் மகிழ்ந்து பரிசளித்தீர்!
சீர்த்தஎன் பாடற் கிரங்காத தென்னை? திரிபுரமும்
போர்த்தகைத் தானவர் தாமும் எரிதரும் புன்சிரிப்பீர்!
நீர்த்தலைச் செஞ்சடை யீர்!நினை யீர் சற்றுநெஞ்சகத்தே. 2

### வெண்டளைக் கலிப்பா - சத்தி

நெஞ்சகத்தில் தோன்றும் நினைவில்விளை யாடிடும்நீ
வஞ்சமின்றிக் கண்ணேர் மயில்போல் வருவதென்றோ?
செஞ்சரணம் போற்றும் சிவனாதி யர்மகிழக்
கஞ்சமலர்க் கைஅபயம் காட்டுமுதற் காரணியே. 3

---

காப்பு. சோதி–பரம்பொருள். ஏழுவித யாப்புடைய தாய், எழுபது பாடலால் ஆக்கப்படும் நூல். ஆறு நெறி–அறுவகைச் சமயங்கள். அதீதநிலை–அவற்றுக்கு மேம்பட்டுப் பொதுவான சமயாதீதம். தாட்டுணை–தாள்துணை.

1. பிழம்பு–திரண்ட ஒளி வடிவம். எரிதிகிரி – தீயை ஒத்த சக்கரம். பால் – பக்கம்.

2. பார்த்தன்–அருச்சுனன். புன்சிரிப்பு – குறுநகை (போரில் வல்ல அசுரர்களைக் குறுஞ்சிரிப்பினால் அழித்தீதல்). நீர்த்தலை–கங்கையணிந்த சிரம்.

3. சிவன் முதலோர் போற்றுதல்–பராசக்தியை, பிரமனாதிய ஐம்பெருங் கடவுளர் வணங்குதல்.

### கட்டளைக் கலிப்பா - திருமால்

காரும் நீலமும் நாணுறு மேனியும்,
கஞ்ச நாண்மலர்க் கண்களி வாய்முதற்
சீரும் அங்கு திகழ்ந்திட நீயொரு
சேவை நல்கியும் தீவினை தீர்ந்திலேன்!
பாரும் விண்ணும் அளந்தபொற் பாதனே!
பற்ப லோர்பெறப் பாலரும் ஆகுவாய்!
யாரும் என்னை அறிந்திடத் தக்கவாழ்(வு)
இக்க ணத்தில் இனிதருள் செய்திடே. 4

### அறுசீர் விருத்தம் – கணபதி

செய்யபொற் புகர்வெற் பென்னச் சிறியனேன் கனவிற் றோன்றிக்
கையநீ ராட்டி நீறும் கவின்பெறத் தரித்த(து) உண்டேல்
வையகம் இகழா வாறோர் வரங்கொடுத் தருள வேண்டும்
மொய்யரு மதமூன்(று) ஊற்றும் முதற்பெருங் கடவு ளானே. 5

### எண்சீர்ச் சந்தக்கவி - முருகன்

தனனதன தத்ததன தந்ததன தந்தன

கடகரிமு தற்கிளைய தம்பிஎன நம்புவார்
கலிகளும்அ றக்களையும் உன்றனைவி ரும்புவேன்
இடர்படவி டுக்கைபுக மென்றுனை விண்றையோ
இதுமுறைய லச்சிகியில் வந்தருள்பு ரிந்திடாய்!
அடலருணை யிற்கிளியு டம்பிடையி ருந்தவா(று)
அறைதருமொ ழித்தொகைஅ னந்தமும்வெ றும்பொயோ
படவர(வு)எ னக்கடித டந்திகழ்ம டந்தைமார்
பலர்தவர் எனத்தின நினைந்துருகும் கந்தனே. 6

---

4. கார்–மேகம். பாலர்–குழந்தை வடிவம். அறிதல்–அருட்பேற்றினால்.

5. பொன்போன்ற புள்ளிகள் புகர். இது யானையின் சிறப்பியல்பினுள் ஒன்று. வெற்பு என்பது மலைபோன்ற பெரிய யானை. இவ்வடிவில் கணபதி தோன்றி, துதிக்கை நீராட்டியும், திருநீற்றைத் தொட்டுத் தன் நெற்றியிற் பூசியும் சுவாமிகட்கருளினர் என்பது வரலாறு. மொய்-வண்டு. மதம் மூன்று-மத்தகத்திருந்து வரும் மதநீரில் வண்டு மொய்க்கும். ஞானம், விநோதம், அருள் என்ற மூன்றையும் கணபதியான யானையுடையதென்பதாகும்.

6. அருணகிரிநாதரான கிளியுடலில் இவர் இருந்ததாக முருகன் கூறிய அநுபவம். மாதர்களும், தவசிகளைப்போலவே நாளும் எண்ணி வழிபட இருப்பவன் முருகன் என்பதாம்.

அகவல் - பொதுத்தெய்வம்

சுந்தநாண் மலரோன் கரியவன் அரனென
இந்தமா நிலத்தோ(டு) யாவையும் படைத்துப்
புரந்தொழித் தருளும் புண்ணியப் பொருளே!
கரந்தநெஞ் சகத்துக் கள்வர் வாழவும்
சீரியர் கலியாற் றிடுக்குற் றழுவு
கூரிய மதியில் குனுங்கரும் நகலின்
வாடவும், புரியும் மறமுத லியசில
நீடலிற் பெரிது நின்னருட் பெற்றி,
வஞ்சமில் புலவோர் வாய்துணிந் திகழ
மிஞ்சணி குன்றும் வெற்றமைதீர்க் குதியே. 7

வெண்பா - சூரியன்

தீராக் கொலைமுயலும் தீயோரும் சித்தியென்னும்
நீரார‌ப் பெற்றுளஇந் நீணிலத்தில் — தாராளம்
இல்லார்பாற் சென்றுசென்று,ஏற்(று) பானலையக் காண்கைநன்றோ
எல்லாய வுண்மைஒளி யே. 8

கட்டளைக் கலித்துறை - சிவன்

ஒளிகொண்ட செந்தமிழ்ப் பாட்டடி யேன்சொல்லில் ஒப்புகில்லீர்!
களிகொண்ட சுந்தரன் சொன்னதற் காப்பல் கதைவிளைத்தீர்!
அளிகொண் டனைத்துயிர்க் கும்பொது நீர்என் அறைந்தமறை
இளிகொண் டருகிய தந்தோ இரங்குதிர் ஏற்றண்ணலே. 9

வெண்டளைக் கலிப்பா - சத்தி

அண்ணல்என வாழ்வார் அனைவரையும் ஈன்றருளிக்,
கிண்ணமுலைப் போகம்நல்கிக் கேடில்மக வாயும்,வரும்

---

7. கரந்த நெஞ்சகம்-உள்ளதை இல்லையென்று மறைத்தலுடைய வஞ்சகலோபர் வாழ்வதும், நல்லோர் வறுமையால் வாடுதலும் தெய்வத்தின் மறச்செயல். பெற்றி—பெருமை.

8. நீர்—குணம். எல்லாய—சூரியன் என்கின்ற.

9. ஒப்புகில்லீர்—ஏற்று அருள்செய்யாதிருக்கின்றீர். அளி - கருணை. பொது—பொதுவானர். இளி—இழிவு. அருகியது - குறைந்தது. ஏற்று அண்ணல்—இடப வாகனமுடைய பெருமான்.

10. அண்ணல்-பிரமன், திருமால், உருத்திரன், மயேசன், சதாசிவன் என்ற ஐந்து தலைவர்கள். இவர்கள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில் புரிபவராவர். இவர்களை ஆதி பராசக்தி தோற்றுவித்தாள் என்பதாகும். தாயாயும், மனைவியாயும், மகளாயும் இருந்து காப்பவள் சத்தியேயாம்.

தண்ணளிதோய் நின்பெருமை சாற்றறியேன் தள்ளிவிடேல்
வண்ண மலர்வாய் மரகதப்பெண் கோகிலமே. 10

கட்டளைக் கலிப்பா - திருமால்

கோவி னங்கள் நடுக்கமு ருமலோர்
குன்றெடுத் துக்குடை பிடித் திட்டநீ
ஆவி நீங்க அவற்றினைச் செற்றுண்பார்க்(கு)
ஆக்க மீந்த அதிசயம் என்கொலோ?
பாவி கட்கெம ஞமெனப் போர்செயும்
பண்பி ழந்து பரதவிக் கின்றையோ?
காவி நாண்மலர்க் காடுறழ் மேனியிற்
கமல மென்னக் கவின்றருள் கண்ணனே. 11

அறுசீர் - கணபதி

கண்ணலர் மூன்று காட்டும் களிற்றுமா முகப்பி ரான்,நின்
தண்ணளித் திருநீ றன்பொற் றடங்கையால் அணியப்பெற்றும்
மண்ணகத் துழன்றேன் அந்தோ மாதவத் திடையூருய
புண்ணினைத் தையும்தீர்த் தன்பர் புடையுறப் புரிந்தாள்வாயே. 12

எண்சீர் சந்த விருத்தம் - முருகன்

தனதனத் தானதன தானதன தானன

புரிமருப் பாடதனில் ஏறும்ஒரு சேவகா
புரமெரித் தார்தம்விழி யாலுதவு பாலகா!
பெரிதுழைத் தேயுந்து சீருரைசெய் வேனைநீ
பிழைபடக் காணல்பிழை யேஅலது ஞாயமோ
அரியமெய்ப் போதமருள் வாயெனமு ழுரெலாம்
அறைதரப் போவுலகில் ஆடகஅ வாவினல்
எரியினிற் சேர்புழுவெ னமிகவும் வாடினேன்
இனிஎனக் காமுதவி ஓர்சிறிது நாடிடே. 13

---

10. மரகதம்-பச்சை நிறமுடையவள். கோகிலம்-குயில்.

11. கோஇனம்-பசு, காளை, கன்றுகள். ஆக்கம் - அரசுரிமை (அன்றிருந்த ஆங்கில அரசு). காவி-கருங்குவளை (நீலமேனி).

12. கண்அலர்-மலர்(பூ) போன்ற முக்கண். பிரான்-பிரானே என்ற விளி. புண்-மனத்துயரம். புடை-பக்கம்.

13. புரிமருப்பு - முருக்கிய கொம்புடைய ஆடு. மெய்ப்போதம் - உண்மையான ஞானம் தருபவன் என்று உலகமெலாம் பேசுமுலகில். ஆடக அவா-பொன ஆசை. எரி-நெருப்பு. இதிற் விழுந்த புழுப்போல.

அகவல் – பொதுக்கடவுள்

நாடு முழுதும், நளிர்கடற் றீவமும்,
மாடும், ஆடும், வதைத்துணும் கொடியோர்
தம்ம என்னும் தனியிறு மாப்பிற்
செம்மவிட் டிருக்கும் தீக்குணம் ஒரீஇத்
தவத்தினர் உவப்பத் தகுமா றியற்றத்
துவக்குதி இன்னே, சொல்வார் சொல்லும்
எவ்வகைச் சமயத் தியற்கையும் தானுய்
அவ்வகை யாதும் அறியா அருளாய்!
எங்கணும் நிறைந்துற் றெண்ணு வாருள்
அங்கமொ டொளிரும் அருட்பெருங் குருவே. 14

வெண்பா – சூரியன்

குருமொழிதொட் டன்புசெய்வோர் கும்பிடுதற் கொல்கா
ஒருமணியே! வானத்(து) ஒளியே! – கருமங்கள்
யாவிற்கும் சாட்சி யெனநின்ருய்! என்னதுசிற்
ருவிக் குவப்பின் றருள். 15

கட்டளைக் கலித்துறை – சிவன்

அருளாழி யன்ன சிவனேநின் அன்பர் அரியதமிழ்த்
தெருளால்உய்ந் தார்எனும் சொல்நம்பி யிவ்வணஞ் சீரழிந்தேன்
பொருளாளர் தம்மை நினைத்தேங்கும் புண்ணறப் போக்கிப்பொல்லா
இருளா தியாமலந் தீர்தனி வீட்டுறும் ஏற்றம்நல்கே. 16

வெண்டளைக் கலிப்பா – சத்தி

ஏற்றம் உனதே எனக்கருதும் என்னைவம்பிற்
கூற்றனிகர் வேளாற் குலைகுலையக் காண்பதென்ருே?
பாற்றனத்துக் கொம்பே! பசியமணிக் குன்றனையாய்
ஆற்றல் அருளி அடியவரிற் கூட்டுதியே. 17

---

14. தீவம்–கடல்வாழ் உயிர் (நாட்டில் வாழ்வதோடு, கடலில் வாழும் உயிர்களையும் கொன்று உண்பவர். தம்ம–தங்களுக்குரியதான. செம்ம–நிறையும்படி. எவ்வகை......குருவே – எந்தச் சமயத்தவரும் வேண்டும் வடிவா விளங்கியும், அவற்றிற்கு எட்டாத அதீதமாகவும், உலகில் வியாபித்துள்ள பரம்பொருள். குருவாகவுள்ளது. (உருவாய்–அருள்வாய் குருவே. கந்தரநுபூதி காண்க)

15. நற்செயலுக்கும், தீச்செயலுக்கும் பொதுவாயிருப்பது. சிற்ருவி–சிறிய உயிர்.

16. சீரழிந்தேன்–துன்பப்பட்டேன். இருள் ஆதியாம்மலம்–ஆணவம், மாயை, கன்மம் என்பவை.

17. வேளால் – எமன் உயிரைப் போக்குதல்போல், உணர்ச்சியைக் கெடுப்பவன் மன்மதன். எனவே கூற்றன் நிகர்வேள் என்ருர். பாற்றனம்–பாலையுடைய தனம்.

கட்டளைக்கலிப்பா – திருமால்

கூட்ட மிட்டுச் சமர்பொருந் தானவர்
கொஞ்சு மங்கையர், கூக்குரல் மேலிட
வாட்ட முற்றவிண் ணூரவர் தங்களை
வாழ வைக்கை மறந்துவிட் டாய்கொலோ
பாட்ட னந்தம் பகர்ந்துமென் துன்பநோய்
பாறு மாறு பரிந்தருள் கின்றிலாய்!
காட்ட கத்தரு ளாலிசை நாரதன்
காணூர் ஆடல்செய் கார்முகில் வண்ணனே. 18

அறுசீர் விருத்தம் – கணபதி

வண்ணவாய்க் குயிலே போலும் வல்லவை மருங்கிற் றேய
விண்ணவர் நடுவின் றுடும் வேழமா முகப்பி ரானே!
கண்ணகல் ஞாலத் தோரும் கண்டுகண் டிகழா வாறென்
புண்ணறக் களைந்து மாயாப் புகழுறப் புரிந்தாள் வாயே. 19

எண்சீர்ச் சந்த விருத்தம் – முருகன்

தானன தனத்ததன தானதன தானா

ஆளென உனைத்தினமும் நாடிமகிழ் வேனைநீ
ஆடக மயற்கடலின் மூழ்கவிடல் நீதியோ
கோளெது பகைத்திடினும் ஓவஅறி யாய்கொலோ?
கோதறு தமிழ்க்குதவி டாமைபுக ழாகுமோ?
தாளெழில் விடைக்குருதி கூறகவல் பூணும்நாள்
சால்பொரு முலைக்கரிய பேயையடும் வீரவேள்
தோளெத னிடத்துமிலை யோகுமர நாயகா!
தூமொழி மறச்சிறுமி தாள்தொழும் விநோதனே! 20

---

18. அசுர மகளிர் அழுது புலம்பும்படி அசுரர்களைக்கொன்று. அவரால் வருந்திய தேவர்களைக் காத்தருளிய செய்கை. பாறுமாறு–அழியும்படி. நாரதர் காணச்செய்த ஆடல். நாரதரைப் பெண்ணாக்கித் திருமால் கூடிய செய்தி.

19. வண்ணவாய்–சிவந்த உதடுடைய வாய். மாயாப்புகழ் – நிலைத்த கீர்த்தி.

20. ஆள்என–உன் அடிமை என்று (முருகதாசனாக). ஓவ–கிரகபீடை மாறும்படி. தாள் எழில்......நாள் – மான் குட்டியின் உதிரம் கலந்த அரிசி யிட்டுப் பூசிக்கும் முறை கூறிய அகவல். ஆற்றுப்படையை ஏற்றருளிய போது. ஆயிரம்பேரைச் சிறைசெய்த பூதத்தைக்கொன்ற வீரம், இன்று உன் தோள் பன்னிரண்டில் எதிலுமில்லையோ என்றபடி.

அகவல் – பொதுக்கடவுள்

வினைவலிப் பயனுல் மேதினித் தலைவாழ்
அனைவரும் நலந்தீ தாமெனச் சொற்றும்
அடியனேன் நின்றன் ஆடல்என் பதுமெய்
படிறுமற் றவை,யெனப் பகரத் துணிந்தேன்
எண்ணம் ஒத்தே இயல்வதுன் றனுது
வண்ணம் என்ன மறைசொல்வாய் மையினுல்
என் துயர் அனைத்தும் இக்கணம் களைந்து
பொன்றுரு இன்பப் புணரியீங் தருள்வாய்
எவ்வகைத் தேவும் எனையல தில்லையென்(று)
அவ்வயி னறிவித் தாண்டதே சிகனே. 21

வெண்பா – சூரியன்

தேசிலங்கு செஞ்சுடரே! தெய்வமுண்டென் றெண்ணிமுன்னுள்
ஆசிபகர்ந் துய்ந்தார் அளவிலார் – பேசிப்
பணிந்தும் மிடியால் பரதவிக்க லாமோ
துணிந்தொருசொல் என்னுள்வந்து சொல். 22

கட்டளைக் கலித்துறை – சிவன்

சொல்லால் உருக்கும் மடவார்தம் இன்பச் சுகம்விழைந்த
பொல்லா மனத்தனென் றென்னைஎள் ளேல்!முனம் போற்றிசைக்க
வல்லா னொருவன்றன் ஒற்றுய்ப் பரவை மனைக்குச்சென்ற
நல்லாய்! கவுரி மணுளா!நின் தொண்டர் நடுவைத்திடே. 23

வெண்டளைக் கலிப்பா – சக்தி

வைத்த நெடுவேற்கண் மஞ்ஞைநிகர் மாதரிநின்
சித்தம் இரங்கியருள் செய்ததற்கும் ஐயமுண்டோ
அத்தனை பேறும்அளித் தாண்டுவகை யாட்டாமல்
இத்தருணத் தேன்சற் றிடையும்வண்ணம் கண்டாயே. 24

---

21. நன்மை தீமை எனபவை, வினையால் வருபவை என்பர். அது பொய்யாகும். நான் எல்லாம் உன்செயல் என்று திரமாய்ச் சொல்வேன். இது மெய். அன்பர் எண்ணப்படி நீ உருக்கொள்வாய் என்பதுண்மை. "எல்லாக் கடவுளும் நானே" என்று முருகன் கூறிய அநுபவம்.

22. ஆசி–துதிப்பாடல்கள். பேசி–அதுபோல துதி பாடியும். மிடி – வறுமை.

23. வல்லான்–சுந்தரமூர்த்தி. பெண்ணாசையுடைவன் என்று என்னை இகழாதே. பரவையிடம் அவருக்குத் தூது சென்றவன் நீ என்று வேண்டிய வாறுகும்.

24. மஞ்ஞை–மயில். மாதரி–இறைவியின் திருநாமம். ஆட்டாமல்–ஆட்டுதல் செய்யாமல் (மகிழ்வுக்கடலில் முழுகப் புரியாமல்). இடைதல் – துன்பமடைதல்.

கட்டளைக் கலிப்பா - திருமால்

கண்ட மாகக் கருதிஎந் நேரமும்
கலக மிட்டுக் கலங்கியு ழன்றிடும்
தொண்ட ருக்கும் நலஞ்செய நாடுமென்
துன்ப முற்றும் தொடைப்பதெந் நாள்சொலாய்!
வண்ட லம்புகைச் சுந்தரச் செந்திரு
மங்கை கொங்கை மணங்கமழ் மார்பனே!
அண்டம் உண்டும் அசோதைம டிக்கண்வாழ்
ஐய னேஅட லாழிகொள் மேகமே. 25

அறுசீர் விருத்தம் - கணபதி

மேகமும் களிறும் ஊர்வான் வேயுருச் சமைந்த மேனாள்
காகமாய்ப் புரந்த வுண்மைக் கருணைஎன் அளவும் இன்றோ?
நாகமொன் றணியும் பண்டி நகுபெரும் பவளக் குன்றே
போகவல் லவைத்தாய் கேள்வா! புழுங்குரு தருள்செய் வாயே. 26

எண்சீர்ச் சந்தக்கவி - முருகன்

தய்ய தானதன தானதன தானனா

செய்ய மேகமென வேமலைகள் தோறும்வாழ்
தெய்வ மேமயில்க டாவும்முரு காமுனாள்
ஐய மேதும்மரு வாதுகிளி தானனா
ஐது நீமொழிதல் ஆசறுமெய் யாகுமேல்
வைய மீதுதிரி யேடணையின் மாறிடா
மைய லார்கிமெலி வாகவிடல் நீதியோ
மெய்யர் சேரும்அனு பூதிதர வேணுமால்
வெய்ய ராயிகல்செய் வார்கள்பொடி யாகவே. 27

---

25. கடவுளை உருவமுடையதாகவே கருதுபவர் (அருவமாயுள்ள பொருள் உருவமாகும்) என்க. வெவ்வேறு கடவுள் வெவ்வேறு புவனத்திலிருப்பதாகக் கொள்வதால் கலகம் விளைவதாகும. கடவுள் இல்லையென்னும் நாத்திகரைவிட, உண்டெனபவர் மேல். ஆதலின், அவர்கட்கும் நலம்செய விழைவதல் காண்க. ஒன்றெனபவர்கட்குச் செய்தல்போல என்று கொள்க.

26. இந்திரன் ஐராவத யானையையும், மேகத்தையும வாகனமாயுடையவன். சூரனாட்சியில் மூங்கிலாகி, சீகாழியில் தவம் செய்தான். அக்காலகாக வடிவில கணபதி தோன்றி அகத்தியர் கலச நீரைக் கவிழ்த்தார். அதிலிருந்து காவிரி நதி பெருகி நலம் செய்ததென்பது வரலாறு. பண்டி-வயிறு. பாம்பினைக் கச்சாக அணிந்த வயிறு.

27. செய்யமேகம்-செக்கர்வானம். கடாவும்-செலுத்துகின்ற. ஐது-விரைவாக. திரிஏடணை-மூன்றுசை (பெண், மண், பொன்).

**அகவல் - பொதுத்தெய்வம்**

ஆகம் ஆதி அனைத்துநிற் களித்திட்(டு)
ஏகன் நீயென் றினிதுணர்ந் ததனால்
இறுமாப் பெய்தி இளம்பக் குவத்தின்
அறுமா நெறியோர் அலமரப் பேசா(து)
அவரவர்க் கவனு அவிர்தரும் பெருமைத்
தவமெனக் களித்த தண்ணருள் வெள்ளம்,
யானும்எற் சார்ந்தோர் எவரும் வாழ
வானுறம் பெருஞ்சீர் வழங்கா தென்னே?
பொன்னென ஒன்ருய்ப் பூண்எனப் பலவாய்
முன்னவ னுகி முழுப்பெருஞ் சுடராய்
இன்றெனச் சொல்வார்க் கின்றே யாயும்
நின்றெலாம் புரக்கும் நிமலநா யகனே. 28

**வெண்பா - சூரியன்**

நாயனைய நெஞ்சகத்தால் நானிலத்திற் சீரழிவேன்
நோயனைத்தும் தீர்த்தின்னே நோக்குவாய்! – சேயநிறச்
சோதிப் பிழம்பே! தொடுகடற்பார் சூழுலகில்
நீதிப் பொலிவாவா னே. 29

**கட்டளைக் கலித்துறை – சிவன்**

வானம் கடந்த பொருளா நிறைந்தும்வெண் மால்விடையின்
மானஞ்சும் உண்கண் மடமாதொ டேறும் மயேச்சுரனே!
ஈனம் பெருத்திங் குழலாதுன் தொண்ட ரிடையிருந்தாய்!
கானம் தழைத்த தமிழ்வேண்டு மேன்மை கவின்தரவே. 30

---

28. ஆகம் ஆதிய–உடல், பொருள், உயிர் என்பன. இவற்றை இறைவன் உடமையாக ஒப்புவித்தல். ஏகன் – எல்லாமாய் விளங்கும் ஒருவன். அறுமா நெறியோர்–அறுசமயத்தினர் அலமருதல்–துன்புறுதல். அது தங்கள் வழிபாட்டுக்குரிய கடவுள், ஒன்றன்றி–வேறு சமயக் கடவுள் உண்டென்றுல் செய்யும் விவாதம். பொன் ஒன்றே பணி பலவானதுபோல, முதன்மைப் பொருள் ஒன்ருயிருப்பது கடவுளியல்பு என்பதை, "பொன்னென ஒன்ருய்ப் பூண்எனப் பலவாம்" என்ருர்.

29. மனம் ஐம்புலன்வழிச் செல்வதால் 'நாயனைய' நெஞ்சம் எனப் பட்டது. மான் அஞ்சும் உன்கண்-உமையின் கட்பார்வைக்கு மான் அஞ்சியே திரும்பியிருப்பதென்க. உண்கண்–மை தீட்டிய கண். கானம்–இசை.

கொச்சகக் கலிப்பா - சத்தி

கவினுர்வெண் ணகைமடவார் காதலுற்றுக் காசினியில்
தவியாதுன் அருள்விழியாற் சற்றெனைப்பார்த் திடலென்ருே ?
புவியீன்று கடலீன்று பொருப்பொடுபல் லுயிரீன்றிட்(டு)
அவியாது புரந்தருளும் அம்பிகைப்பெண் ஆரமுதே. 31

கட்டளைக் கலிப்பா - திருமால்

ஆர ணன்தனை உந்தியிற் றந்ததால்
அண்ட பிண்டம் அனைத்தும் அளிக்கும்நீ
கார ணந்தெரி யாரெதிர் சென்றுநான்
கைவி ரித்திடக் காண்பது நீதியோ ?
பார ணங்கின்இ தங்குறிப் பார்கள்மேற்
பட்ச முண்டெனப் பன்னிய சொற்பொயோ ?
வார ணம்கத றும்தினம் அங்குபோய்
வாழ வைத்த மரகதக் குன்றமே. 32

அறுசீர் விருத்தம் – கணபதி

குன்றமே யனைய கொங்கைக் கோமள மகளிர் ஆசை
என்றனை வருத்தா வண்ணம் இரங்கியாண் டருள்வ தென்ருே ?
முன் றனக் கிளையான் வாழ்வான், முருடமின் வெருளக் கானிற்
சென்றவா றுரைக்கும் அன்பர் செயம்பெறச் செய்யும் தேவே. 33

எண்சீர்ச் சந்தக்கவி – முருகன்

தான தத்ததன தந்ததன தந்தன

மான்ம கட்கெளிய னென்றுதினம் என்றன்வாய்
மாநி லத்தினர்அ றிந்திடமொ ழிந்ததால்
மீன்ம தர்க்கண்மட மங்கையர்கள் கொங்கைமேல்
வீழு மிச்சைவிளை யும்படிநி னைந்தையோ
ஆன்ம ரத்தடிதொ ழும்சதுரர் தம்பிரான்
ஆர்வ முற்றிடல் மொழிந்தகுரு வென்றசீர்
நான்ம தித்துமொழி யும்பயனை யும்தராய் !
நாண்ம லர்க்குரவு டன்கமழ்க டம்பனே. 34

31. அவியாது புரத்தல்–துன்பமெய்தாமல் காத்தல்.

32. வாரணம்-கசேந்திரனை யானையை முதலை கவ்வியபோது சென்று, காப்பாற்றியது.

33. முன்–தனக்கு இளையான்–முருகப்பெருமான் பொருட்டு. முருடமின்–வேட மகளான வள்ளி.

34. மான்மகள்-வள்ளிநாயகி மீன்மதர்க்கண்-மீன்போன்ற வலியகண். ஆல்மரத்துஅடி–கல்லாலமரத்தின் கீழ். சதுரர்–சனகாதிய நால்வர்.

அகவல் – பொதுக்கடவுள்

கடல்,வரை புவி,மதி, கதிர்முத லியபொருள்
படஅரு ளியபெரும் பாழிய திருவருள்
உடையநின் பெருமை உரைக்கரும் பாற்றென்(று)
இடையரு தொலிப்ப, எண்ணில்பன் மறைகள்
அங்ஙனம் பயிலல் அசத்திய மன்றென்(று)
இங்ஙனம் தளரும் யானும்ஓர்ந் துள்ளேன்
ஆயினும், அடிகள்! ஆன்இவெம் பசுங்கன்(று)
ஏயிரை எனக்கொண் டிறுமாப் பவருக்(கு)
ஆக்கமிக் குதவல் அதிலரு வருப்புத்
தாக்கமிக் குற்றது தணந்தறம் புரப்பாய்!
இங்கும் அங்கும் எங்குமொன் ருகிப்
பொங்குமா னந்தப் புணரியார் அமுதே. 35

வெண்பா – சூரியன்

ஆரணங்கள் கோடி அமைந்தழிதற் கானபெருங்
காரணமா நின்ற கதிரோனே – வாரணக்கோ(டு)
அன்ன முலையாரும் ஆடகமும் அம்புவியும்
என்னறிவைத் தின்றிடக்கா ணேல். 36

கட்டளைக் கலித்துறை - சிவன்

காணம்பெற் றன்றுன் கரத்தால் வரைந்த கவிசுமந்தோன்
தாணம் பியகுறிஞ் சிப்பாடி யூரன்முற் சாற்றும்தொண்டர்
ஆணம் பலித்தநின் றஞ்சிநொந் தேன்அங்கண் ஆள்வைகொல்லோ!
பாணம் பரியும் மணியாளு மாய பரம்பரனே. 37

---

35. அடிகள்–அடிகளே (ஆண்டவனே) என்ற முன்னிலை. ஏய்இரை–பொருந்திய உணவு. தாக்கர்–தாக்குதல்.

36. ஆரணங்கள் – வேதங்கள் (சமய நூல்கள்). வாரணக்கோடு – யானைத் தந்தம். மண், பெண், பொன் என்பவை. அறிவை அதன்வசப் படுத்தல் கூடாது என்பது.

37. கரணம் – பொன். கவி – இறைவன் கையால் எழுதிய கவி திருவாசகம். இதெழுதிய ஏட்டைச் சதா சிரசில் கொண்டவர். குறிஞ்சிப்பாடி அம்பலவாண முனிவர் முதலியோர். ஆணம்–அவரன்பு. நற்பயன் தராத தால் நான் அஞ்சினேன். (திருமாலே) அம்பாயும், ஏறும் இடபமாயும், தேவியு மாகக்கொண்ட சிவன்.

வெண்டளைக் கலிப்பா - சத்தி

பரமாய பெரும்பொருளிற் பாதிநீ என்பார்க்கும்
உரமீந்த நின்னருள்எற் கொருசிறிதும் உதவாதோ
கரமீதில் அங்குசமும் கயிறும்அணி கார்முகிலே
குரவாரம் புனைந்தானிற் குலவும்நலம் விழைந்தேனே. 38

கட்டளைக் கலிப்பா - திருமால்

தேன ருசுப சுந்துள வாரமும்
செய்ய மாமணி யும்திரு மங்கையும்
மான வண்டமி ழும்புனை மார்பில்என்
வாஞ்சை கொஞ்சம்முன் வைத்தது பொய்க்குமோ
ஈனர் வாழ்வது கண்டடி யேனுளம்
ஏங்கு மிந்த இளப்பம்நிற் கில்லையோ
பான லம்பெருங் காடென வெண்கடற்
பள்ளி கொண்டருள் பாலிக்கு மாயனே. 39

அறுசீர் விருத்தம் - கணபதி

மாயவேல் விழிமின் னூர்தம் வன்முலைத் துணையே நாடும்
பேயனேன் தவம்பொய் யாது பேரருட் பெருக்கம் ஈந்தாள்!
காயகர் உணரா முக்கட் களிற்றுமா முகப்பி ரானே!
நீயநாள் உரைத்த மாற்றம் நிசமென மகிழ்ந்துள் ளேனே. 40

எண்சீர்ச் சந்தக்கவி - முருகன்

தான தந்தன தனந்தன தனந்தன

ஏன மொன்றற முனிந்ததில் இயைந்தகோ(டு)
ஈசன் நெஞ்சினில் இலங்குற அணிந்தநீ
கான மங்கையொடும் வெண்களி றுதந்தோர்
காதல் அங்கனை யொடுந்தெரி சனம்தராய்

---

38. குரவு ஆரம்-குராமலர் மாலை உடையவன் முருகப்பிரான்.

39. மாமணி-கவுத்துவப்பூண். பானல்அம்காடு-நீலோற்பலப்பூவின் குவியல்போன்ற மேனி. வெண்கடல்-பாற்கடல்.

40. காயகர்-வஞ்சகர்.

41. ஏனம்-பன்றி. வராக அவதாரமெடுத்த திருமால், ஆவேசமுற்ற போது, அதன் பல்லைப்பிடுங்கி முருகன் தர இறைவன் அணிந்தனர். கான மங்கை-வள்ளி. வெண்களிறு-ஐராவதம். அங்கனை-தெய்வயானை.

ஈனர் தங்கடை தொறும்திரி தல்ஒஞ்சுரு
யான்நின் அஞ்சுக மெனும்சொல்மறை யுங்கொலோ
பான லங்கண்உமை தந்தசிறு மைந்தனே !
பாம டந்தைநிக ரும்புலவர் நண்பனே. 41

அகவல் – பொதுக்கடவுள்

நண்ப ராகி நல்லறம் பயிலும்
பண்பினர் எவர்க்கும் பரம்,பொது வென்னுச்
சிலர்பெறும் பேற்றில் சிறிதும் இன்றித்
தலமிசை யடியேன் தயங்குறத் தகுமோ
நீயல தொருதே(வு) நிகழ்த்துதற் குளதோ
காயகம் மருவேன் கருத்தறி யாயோ
பல்லுயிர்க் கிதமே பகல்இரா முயலும்
நல்லுணர் வளித்த நாதன்நீ யலையோ
கொன்றுணும் கொடியோர் கூட்டம் குலைய
வென்றறும் களிப்பில் வீடுயர்(வு) அன்றென்(று)
உன்னுநர் உளந் தொறும் ஒளித்து
மன்னுமெய்ப் பொருளா வயங்குதே சிகனே. 42

வெண்பா – சூரியன்

சிகரியில்நின் றங்நாள் சிறியேன் உருள்கால்
அகமறிய மாயா தளித்த – பகலவனே !
கொண்டிருந்தும் ஈனக் குரவரினும் தாழ்ந்துலகிற்
பொன்றலுரு வாழ்வருள் இப் போது. 43

கட்டளைக் கலித்துறை – சிவன்

போதென்று கல்லெறிந் தாற்கு(ம்)மெய் வீடருள் புண்ணிய!நின்
மீதென்றன் வாய்சொலும் பாடலெல் லாமும் வெறுத்தனையோ ?
சூதென்ற கொங்கைமின் னூடல்தீர்வன சொற்றிசைக்கும்
தூதென் றனுப்பினல் லால்மகி ழாய்கொல்! துதித்தமிழ்க்கே. 44

---

41. ஒஞ்சுரு–நாணப்படாத. அஞ்சுகம்–கிளி. பானல்அம்கண்-குவளை மலர் ஒத்த அழகிய கண். பாமடந்தை–கலைமகள்.

42. வீடுபேறு–தன் உயிர்மட்டும் நலம்பெறுவது உயர்வன்று. கொலை புலையுடையவரை–அச்செயலினின்றும் நீக்குவது பல உயிர்வாழச் செய்தலாம் என்று எண்ணுவோர்.

43. சிகரி–மலை. திருமலையில் உச்சியிலிருந்து உருண்டபோது இறவா மற் காத்த கடவுள் சூரியன். இறைவனைக் காணும் ஆவலால் வேண்டினர். வராததால் உருண்டனர். இதன் விடரம் நூலாசிரியர் வரலாற்றில் காண்க.

44. போதென்று கல் எறிந்தவர்–சாக்கிய நாயனர். சூது–சொக்கட்டான் காய். ஊடல் தீர்வன–சங்கிலியார் மணத்தால் பரவையார் கொண்ட ஊடல் தீரத் தூதுசென்று கூட்டுதல். சுந்தரர் போன்று, தூதனுப்பும் தமிழ்க்குத்தான் திருவுளம மகிழ்வீரோ. வெறுந்துதிப்பா – என்னுடைய பாடலில் விருப் பில்லையோ என்றபடி.

வெண்டளைக் கலிப்பா - சத்தி

துதித்தவனுக் கடிசிலிடத் தொடர்ந்துடர்நின் துணைத்தாள்கள்
பதித்தமனத் தடியேனைப் பலவாறு படுத்தாமே
கதித்தபெரு வாழ்வருளிக் கடைக்கணித்தற் கிசையாயோ ?
திதித்தலைவ னெடுதோன்றிச் சிவனுருகத் திகழ்வாளே. 45

கட்டளைக் கலிப்பா - திருமால்

வாளெ டுத்தகைத் தானவர் கோனெதிர்
மண்ண ளந்(து)அகல் வானளந் திட்டபூந்
தாளெ டுத்தஎன் சிந்தையின் சஞ்சலம்
தன்னை நீக்கும் தகுதிநிற் கில்லையோ ?
வேளெ டுத்த சிலைச்சுவைச் சொல்லியாய் !
வேணி யீசன் விலைப்படக் கண்டதோர்
காளெ டுத்த நிறப்பெருங் குன்றம்நேர்
கண்ண னேமலர்க் காரிகை நாதனே. 46

அறுசீர் விருத்தம் - கணபதி

நாதநா தாந்த மென்ன நவிலிரு பொருளு மாகி
வேதநூல் அனந்தம் ஈன்ற வியன்பிர ணவத்தில் மேவிப்
போதக வடிவம் காட்டும் புனிதமுன் னவனே ! என்றன்
தீதறக் களைந்துன் அன்பர் திருச்சபை யிடைவைப் பாயே. 47

எண்சீர்ச் சந்தக்கவி - முருகன்

தான தத்தன தனத்தன தனத்தன

பாய்த கர்ப்பரி நடத்திஉ லகிற்பலோர்
பாடொ ழித்தருள் அருட்கடல் படைத்தநீ
ஆய்த மிழ்க்கவி தொடுத்துனை வழுத்துவேன்
ஆகு லப்பட விடுத்ததென் உரைத்திடாய் !

---

45. வடமொழியிலிருந்த சௌந்தரியலகிரி நூலைத் தமிழிற்பாடியவர் கவிராசபண்டிதர். அவருக்கு ஆறுமாதம காசி போய் வரும்வரை அவர் மகளுருவிற்சென்று சமைத்து உணவிட்ட வரலாறு. அடிசில் – சோறு. படுத்தாமே–துன்புறச்செய்யாமல். கதித்த-மேலான. திதித்தலைவன்-திருமால். திதி–காத்தல்.

46. தானவக்கோன்–மாபலிச்சக்கரவர்த்தி. வேள்எடுத்த சிலை-கரும்பு. சுவைச்சொல்லியாய் – இனிய கரும்புச் சாறுபோன்ற சொல்லையுடைய மோகினியாகி. வேணி–சடை. விலைப்பட–வசப்படும்படி. காள் எடுத்த-கறுப்பு நிறம் உடைய. மலர்க்காரிகை–திருமகள்.

47. போதக வடிவம்–யானை உருவம்.

48. தகர்ப்பரி - ஆட்டு வாகனம். ஆகுலம் - துன்பம்.

பேய்த னக்குவெரு விச்சொல்அக வற்கொள்மா
பீடு கெட்டதுகொல்? இப்படிம லேக்கும்நீர்
தாய் தகப்பன்நடு வுற்றமகர் பற்றலோ
சாத னேக்குறவர் மைக்குயிலி டத்தனே. 48

, அகவல் – பொதுக்கடவுள்

இடனகல் உலகத்து இருவகை உயிரும்
உடனுடன் படைத்திட் டு,உணவளித்து அளித்துக்
கொல்லல், என்னக் குலவுமுத் தொழிலும்
மல்லல் வார்கடல், மலேமழை, முதலியவற்(று)
இயற்கையும் பிழையா தியற்றும் உனது
செயற்பொலிவு (அ)ளப்பில, செழுந்தமிழ்ப் புலவர்க்(கு)
அந்த நாளில் அறைந்தவா றருள்நீர்
இந்த நாளில் இழந்தமை என்னே?
அறுவகை நெறிக்கும் அவைகலந் தல்லா(து)
உறபொது நிலேக்கும் ஒருதனி முதலாய்
இகழ்வொடு புகழுமிக் கேற்றுத்
திகழ்தரு தெய்வத் திருவருள் வெளியே. 49

வெண்பா - சூரியன்

வெளிமுழுக்க நின்றெரிக்கும் வெய்யிற் சுடரே!
அளியுவக்கும் தாமரைநின் ருள்வாய்! – களிமலிந்து
முன்னேச் சமய முனிவரென வாழும்வண்ணம்
என்னேப் புரந்தருள்வா யே. 50

கட்டளேக்கலித்துறை - சிவன்

வாயாரப் பித்தனென் றெள்ளிய சுந்தரன் மட்டும்சொந்தச்
சேயாங்கொல்? வேண்டிய எல்லாம் கொடுத்தொற்றிற்
சென்றுஞ்சொன்ஞய்
பேயாமென் றிந்த வுலகோர்எள் ளாதெனேப் பேணிக்கொள்வாய்
மாயாது வெள்ளி மலேமேல் நிலாவுபொன் வண்ணக்குன்றே 51

---

48. அகவல்–ஆற்றுப்படை. நக்கீரர் பேயின் கொடுமைக்குப் பயந்தே பாடினர் என்பதாம். அதை ஏற்ற உன்பெருமை இன்றில்லேயோ. அருள்புரிய மலேவதன் தன்மை, சிவன் பார்வதியான இருவர் நடுவுற்ற பிள்ளேயான நீ, கொள்வது முறையா? வேடர் வளர்த்த வள்ளி நாயகனை த ன்மையோ என்றபடி.

49. பொதுநிலே–சமயாதீதம்.

50. அளிஉவக்கும்–வண்டுகள் விரும்புகின்ற.

51. ஒற்றில்–தூதுவஞக.

வெண்டளைக் கலிப்பா – சத்தி

வண்ணப் பவள மலர்வாய், மடமகளிர்
கிண்ணத் தனம்விரும்பிக் கேடுகெடக் கண்டனையே!
எண்ணத் தொருசற் றிரங்கிஅருள் என்றருள்வாய்!
சுண்ணப்பொன் நீற்றுனைத் தோய்ந்துமகிழ், சுந்தரியே. 52

கட்டளைக்கலிப்பா – திருமால்

சுந்த ரத்திரு மின்வளர் மார்பினில்
தோய்வ தாய துளவமென் மாலைநேர்
பைந்த மிழ்ப்பனு வற்றரு வேனையிப்
பாரில் நோவப் படுத்தலும் நீதியோ
அந்த நாளில் ஒருதமிழ்க் காகநீ
அங்கு போய்வரும் அற்புதம் மெய்யெனில்
இந்த வேளை எனக்கருள் ஈகுவாய்!
எண்கண் வேதனை ஈன்றஐய் யாரனே. 53

அறுசீர் விருத்தம் – கணபதி

ஆரணத் திரள்முற் றீனும் அருட்பிரண வத்துற் றுடும்
வாரணக் கடவு ளானே! மகிதலத் துள்ளோர் எல்லாம்
நாரணன் எனக்கொண் டாடும் நலம்பெற விழைந்தேன் தன்னைச்
சீரணப் படுத்தா(து) ஆளத் திருவுளம் இரங்கு வாயே! 54

எண்சீர்ச் சந்தக்கவி – முருகன்

தானதன தத்ததன தத்ததன தந்தன

வாய்கொடுது தித்தகவி அத்தனையும் வம்பென
மாய்வுறவி டுப்பைகொல்ள னப்பெரிது வெம்பினேன்,
ஆய்கொதுகெ னத்தகுபு றச்சமய நண்பினோர்
ஆளிநுகர் புட்குலமெ னத்திகழ்வ தென்கொலோ
பேய்கொலைசெ யத்துணியும் அப்பொழுதி றைஞ்சுபா
பீடுறநி னைத்தவருள் இத்தினம்அ ழிந்ததோ
தாய்கொழுந னுக்கோர்சொல் உரைத்தபுகழ் கொண்டுவாழ்
சாமியென மெச்சுநர்உ ளத்தி லமர்கந்தனே. 55

---

52. நீற்றுன்–சிவன்.

53. ஒரு தமிழ்க்காக–திருமழிசையாழ்வாரென்ற தமிழ்ப் புலவருக்காக. (அல்லது ஒரு தமிழ்ப் பாட்டுக்காக) திருமால் சென்று திரும்பி வந்தது.

54. ஆரணத்திரள்–வேதக்கூட்டம். எதற்கும் முதலாவது பிரணவம்.

55. ஆய்கொதுகு–முகத்தில் ஆயும் சிறு கொசு. அதுபோன்றுள்ள இழிமதத்தினராவோர், சிங்கத்தைத் தூக்கும் சரபத்தைப்போல இறுமாப்புடன் இருப்பது ஏனோ. இறைஞ்சுபா–ஆற்றுப்படை. தாய்–உமை. கொழுநன்–கணவனான சிவன். ஓர்சொல–பிரணவப்பொருள். சாமி–குருநாதன். (சிவ குரு) என்றபடி.

### அகவல் - பொதுக்கடவுள்

கந்தன் ஆதிய கடவுளர் அறுவரய்ச்
சிந்தனைக் கண்முன் திகழ்தரு மொருவ!
நின்னருள் வேட்டு நெடிதுநெட் டுயிர்ப்பேன்
அன்னர்பற் பலர்மாய்ந் தழிவுறக் கண்டும்
வாடு கின்றேன், மற்றதுஎன் றனக்கும்
கூடு மாறு கொடுமை செய்யேல்!
நனவினும் கருதும் நல்லுருக் காட்டி,
அனவர தமும்நல் அறமுதல் மூன்றும்
நனிபட வருத்தி, நான்மறைச் சென்னி
தனில்வள ருண்மைச் சமரச முணர்த்தி,
என்னகம் அறிதர இலைப்பொடி யருளிச்,
சொன்ன வாறு துலங்கவைத்து, அப்பாற்
குழீஇய தொண்டர் குலத்தொடு நின்னுட்
கெழீஇவிர வுறுமா கிருபைசெய் தருளே. 56

### வெண்பா – சூரியன்

அருளாண்மை யுற்றதொண்ட ராமவரோ டென்னைச்
தெருளாளர் பேசும்வண்ணம் செய்வாய்! – இருளார்
குடைநிழற்கீழ்ச் சாவதஞ்சிக் கும்பிட்டேன் கண்டாய்!
படைநெடுங்கட் குந்திமின் அன் பா. 57

### கட்டளைக் கலித்துறை - சிவன்

அன்பாளர் பற்பலர் சூழ்தரச் சென்றுநின் ஆலயந்தோ(று)
இன்பாடல் பாடல்என தாசை,உன் றற்கிது வெறுப்போ
என்பா மதுரந் தவிர் ஈன மோ! அருள் ஏன்செய்திலாய்?
முன்பாவ லான்விடுந் தூதென்றும் போய்வந்த முக்கண்ணனே! 58

---

56. நெட்டுயிர்த்தல்-பெருமூச்செறிதல். மற்றிது-அவர்போல மாய்வது. அனவரதம்–நாடோறும். வருத்தி–வரச்செய்து. இலைப்பொடி–பன்னீரிலைத் திருநீறு. குழீய–குழுமிய (கூட்டமான) கெழீஇ–கலந்து.

57. இருள்ஆர்குடை – கருங்குடை. இது கொடுங்கோன்மையை. நீச அரசைக் குறிக்கும். இறப்பதுண்டானாலும், இத்தகைய அரசுள்ள காலத்தில், அதைப்போக்கி, நல்லரசு காணுமல் இறப்பது வேண்டிலேன். அம்புபோன்ற கண்ணுடைய குந்திக்குரிய கணவனுயிருந்த சூரியமூர்த்தியே.

58. என்பா–மதுரம் தவிர், ஈனமோ–எனது இனிய கவிகள், சுவை யற்றதாயுளதோ. சுந்தரர்க்குத் தூதாகியும் சென்றவரல்லவா நீர்.

### வெண்டளைக் கலிப்பா - சத்தி

கண்ணம்பால் எய்து, கருத்தைக் கவர்மடவார்
எண்ணம் பெரிதுநினைத் தேங்கும்வினை யென்றொழிப்பாய்!
கிண்ணம் பொருவுமுலைக் கேகயப்புள் போன்றுதினம்
நண்ணன்பர் சிந்தை நடுவாழும் நாரணியே. 59

### கட்டளைக்கலிப்பா - திருமால்

நார ணன்பரம் என்பவர்க் கன்பனும்
ஞான மீந்ததனை, நானிலத் திற்சிலர்
கார ணந்தெரி யாதெதிர்த் தேசிடும்
கட்ட முற்றும் கழித்திலை, என்செய்வேன்
ஆர ணந்தரு வானைமுன் தந்துளாய்
அம்பு யாதனத் தங்கனை யேங்குற
வார ணம்பிழைக் கும்படி சென்றசீர்
வாழ்த்து வாருள் வயங்குறு மாயனே. 60

### அறுசீர் விருத்தம் - கணபதி

மாயமாம் உலகில் உண்மை வாழ்வடைந் துவந்து பின்னர்
சேயநின் பதத்திற் சேரத் தினங்குறித் திறைஞ்சு மென்னைப்
பேயரும் இகழக் கண்டாய் பெரிதருள் பொழிவ தென்றோ
காயக மனத்தர் காணுக் களிற்றுமா முகப்பி ரானே. 61

### எண்சீர்ச் சந்தக்கவி - முருகன்

தனன தானதன தன்னதன தானன

முகமொ ராறுகொளும் நின்னது சொருபமே
முழுது மாகும்எனும் உண்மையறி யார்கள்போல்
இகம தூடுதள ரென்முன்மயி லேறிநீ
இனியெ நாள்வருதல்? முன்னருணை யூரிலோர்

---

59. கேயப்புள்-மயிற்பறவை.

60. பரம்-முதன்மைப்பொருள் என்பவர் எத்தகையரேனும் அவர்க்கு அடிமையாதல். எதிர்த்து ஏசுவோர்-மற்றைய சமயங்கள் இதை ஒப்பாது இகழும் துயரம். ஆரணம்தருவான்-பிரமன். அம்புயத்து அங்கனை-தாமரைப் பூவிலிருக்கும் திருமகள். கசேந்திரனை முதலை கவ்வியபோது அதைக் காப்ப தற்காகத் திருமால உடனே நீங்கிச்சென்றது திருமகளுக்கு ஏக்கந்தந்தது என்க.

61. உண்மை வாழ்வு-திருவருட்பேறு. உலக வாழ்வு மாயம். காயகம்-வஞ்சம்.

62. முழுதும் - உலகில காணும் யாவும் முருகன் சொருபமாகக் காணல்.

சுகம தானகதை சொன்னமலர் வாய்,ஒஞர்
தொலையு மாறுபகர் வண்மைபுனை யாததோ
குக!ம காரதர்க ளெண்ணியவி சாக!வேல்
குலிச மாதியகொள் பன்னிருகை வீரனே. 62

அகவல் – பொதுக்கடவுள்

வீர மின்றிய வெளிற்றுரு வஞ்ச
நீரவ ருப்ப நிலவருள் வறந்து,
பெருந்தவத் தினரைப் பிரியா து,என்றும்
பொருந்துபு வாழும் புகழ்மிகப் பொலிந்து,
வெறிநீர் வள்ளுரம் வெறுத்து, மேதகு
பொறியார் படைப்பன புசிக்குமாண் பெய்தி
யாவர்என் செய்யினும் இயைதரு குணம்போய்ப்
பாவ புண்ணியப் பகுப்புறப் பார்த்(து)இழி
ஊன்படு கனற்புகை உயிரா (து)ஒள்ளிணர்த்
தேன்பனி மலர்த் துணர்ச் சீர்மணம் விழைந்து
புன்கலைத் துதியாற் புளகம்எய் தாது
தென்கலைக் கவிக்கே திருச்செவிக் காதல்
எய்துறப் பண்டை இயல்பு கொடுவாழி!
வைதுளார் சிலர்க்கும் மால்விடைப் பாகன்
ஆதியர் ஆகி அருளிய அருமை
நீதியெங் கொளித்தாய்? நிகழ்வன பலவும்
ஆயியா திடத்தும் அணையா ததுமாய்த்
தாகி யாள்விற் சற்குரு வாய்ப்பல
வேதநூல் அனந்தம் விளம்பியும் அமையாப்
போதவா ரிதியாம் பொருவில்பூ ரணமே. 63

---

62. சுகமதான கதை – அருணகிரிநாதரான கிளியாகத்தானிருந்த வரலாறு. மகாரதர்–வீரர்கள்.

63. வெளிற்றுரு வஞ்சர் – வெள்ளை யுடம்புனிருந்த (ஆங்கிலேய) வஞ்சர். வறந்து – கெட்டு. வள்ளுரம் – பசுவூன். பொறியார் – நல்விதி யுடையவர். ஊன்படுகனற் புகை – வேள்வியிற் பெய்யும் ஊன் அவிமுறை உயிர்த்து வாழாமல். புன்கலை – நீசமொழி. தென்கலை – தமிழ் மொழி. வைதுளார் சிலர்–சுந்தரர் முதலியோர்.

வெண்பா - சூரியன்

பூரண மென்னும் பொருள்நின் னொளியாம்மெய்,
பாரறியக் காட்டும் பகலோனே — கோர
இருப்புலக்கை யாற்பசுக்கள் ஈண்டிறத்தற் காணும்
விருப்புனக்காங் கொல்லோ விளம்பு. 64

கட்டளைக் கலித்துறை — சிவன்

விளம்பும் புலவர் சிலர்க்குமுன் னீந்த விருதி லொன்றும்
உளம்புழுங் கித்துதிக் கின்றேற்கு நல்கிலை, உம்பருய்யக்
களம்புகு நஞ்சம் படர்ந் திறந்தாய் கொல்!கவுரி மீன்னும்
சளம்புகன் றேங்குகின் ருளோ எண்டோள்முக்கட் சங்கரனே. 65

வெண்டளைக் கலிப்பா - சத்தி

சங்கலம்பு தாமரைக்கைத் தையல்நல்லோர் யாவரும்நின்
அங்கமெனத் தேறும்என்பால் அங்கசன்போர் செய்வானேன்
பிங்கலவிற் கொண்டபித்தன் பித்தமைந்த தாகுமிடப்
பங்கமரும் நங்காய்! பரிந்தருட்கண் பார்த்தருளே. 66

கட்டளைக்கலிப்பா — திருமால்

பார ளந்தநின் பொன்னடிச் சீர்உ(ன்)னும்
பாவ மாந்தர் படிறுகண் டொல்குவேன்
கார ளந்த ககனவி லாசமும்
கண்ட ளந்த கழற்கு(உ)ற வாவனே
சீர ளந்த திருமகள் கொண்கனே!
செங்கை யாழி, திகிரிமெய்த் தெய்வமே!
ஊர ளந்தஇந் நிந்தையெல் லாம்கெடுத்(து)
உண்மை ஞானம் உதித்திடச் செய்தியே. 67

---

64. பொருள்—பரம்பொருள் சூரியனின் ஒளியாயுள்ளது. பசுக்களை இரும்பு உலக்கையால் சிரசில் அடித்துக் கொல்வதைக் கண்டிரங்கினர்.

65. களம்புகும் நஞ்சம்—கழுத்தில் தங்கியவிடம். சளம்—துயரம்.

66. சங்கு அலம்புதல்—சங்கினலான வளையல் ஒலித்தல். அங்கசன்—மன்மதன். பிங்கல வெற்பு—பொன்மலையான மேருகிரி. அதை வில்லாகக் கொண்ட இறைவன். பித்தமைந்து—ஆசையுற்று.

67. உன்னு—தியானிக்காத. கார் அளந்த ககனவிலாசம்—மேகத்தாற் கண்டறிந்த ஆகாயத்தை. ஒரு திருவடியால் அளந்த பெருமை.

### அறுசீர் விருத்தம் – கணபதி

செய்யபொற் புறத்தன் றேபோற் சிதடனேன் மகிழத் தோன்றி
ஐயமற் றுணரு மாசொற் றருளிய அருள்கண் டில்லேன்
வையகம் மதிக்கும் பேறே மகத்துவம் என்ன நாடாப்
பொய்யவா அளித்த தாரோ பொருவில்ஐங் கரப்புத் தேளே. 68

### எண்சீர்ச் சந்தக்கவி – முருகன்

தான தத்தன தந்தன தந்தன

தேளெ னத்தகுகொ டுஞ்சொல்பகர் வம்பாநர்
தீயெ ழப்பொ ருது,வென்றிபெறு தம்பிமார்
ஆளெ னப்பலர்வ ளைந்துவர இங்குநான்
ஆடல் பற்பலபு ரிந்திடவி ழைந்துளேன்
மாளெ னக்கொலநி னைந்திடல்! அவண்செய்தால்
வாகு விற்கிளியெ னும்சொல்அழி யும்,கண்ஓர்
வாளெ னக்கொடுன்வ லந்திகழும் என்றன் ஆய்
மாறு பட்டுனையி கழ்ந்தொழிவள் கந்தனே. 69

### அகவல் – பொதுக்கடவுள்

கந்தனு வந்து கதிர்மதி உடுத்திரள்
பைந்தகைப் பார்முதற் பகர்பூத பௌதிகம்
சாற்றுநர் சாற்றும் சமையபே தங்கள்
போற்றுநர் போற்றும் பொருள்பிற அனைத்தும்
யானே யாமென் றியைந்தும் இயையாக்
கோனே தமியேன் கூறும்விண் ணப்பம்
ஒன்றுகேள்! உணர்விற் குணர்வாம் நீயுள்
நின்றுளாய், அதனுல் நிறைமகிழ் வடையேன்
எண்ணு மாறே எதிரினி திலங்கிப்
பண்ணுலாம் துதிச்சொல் பலவும் சூடி
அறுவகைச் சமயத் தவர்க்கும் அவரவர்

---

68. பொய் அவா–உலக ஆசை.

69. தம்பிமார்–வீரபாகு முதலியோர். ஆள்என – பக்கத்துணையாவர. மாள்என – அழிந்து படும்படி. வாகுவில் – தோளிலணிந்திருந்த. ஆய் – தாயான வள்ளிநாயகி, மகனை தன்னைக் கொன்றாய் என்று மனம் நோவாள் என்பதாம்.

70. பூதம் – மண் முதலிய ஐந்து. பௌதிகம் – அதனோடு தொடர் புடையவை.

உறுதி காட்டும் ஒருபெருங் குரவன்
ஆக்கி,ஓர் கனவில் அடியேற் களித்த
பாக்கியம் மெய்யாய்ப் பலிப்புறக் காட்டிக்,
கொலைபுலை யொழிந்து குவலயத்(து) யாண்டும்
அலைவரும் கருணை அமைதரப் படுத்திப்
பின்னர்என் னுடலும் பிரணவ மயமாய்ப்
பன்னவைத் தருளாற் பருகுதி பரிந்தே. 70

### நூற்பயன் – வெண்பா

ஏக மயமே எழுகூறுத் தோற்றுமுண்மைக்(கு)
ஆகஎழு பாஎழுபஃ தாற்றினேன் – சோகச்
சமையவிகற் பந்தீர் சமரசத்தோர் சிந்தைக்(கு)
அமையுமற் றோர்க்காகாத தே.

குருபாதமே துணை.

### ஏழு சமய விளக்கப்பாடல் - கட்டளைக் கலித்துறை

சூரியன், சந்திர சேகரன், அம்பிகை, சூழ்நெடுமால்,
பேரியற் கைக்கண நாதன்,செவ் வேள்மெய்ப் பிரமம்என
ஆரியம் சொல்லும் எழுகூறும் தேசிகற்(கு) அங்கமென்பார்
சீரியர் அன்னவர் தாட்டுகள் யாவும்என் சென்னியவே.

(ஏழாயிரப் பிரபந்தம்–பாயிரம்)

நூற்பாடல் 70, காப்பு 1, நூற்பயன் 1 ஏழுசமய விளக்கப்பாடல் 1
ஆக 73 பாடல்கள்

முற்றிற்று.

தெய்வமே துணை.

---

70. பெருங்குரவன்–சொருபசித்தன். பருகுதல்–தன்னுட் கொள்ளுதல்.

நூற்பயன்: ஏகமயம் – எங்கும் பரந்த அகண்ட பரம்பொருள் ஒன்றே. எழுகூறுய்–ஏழு பகுதியாகியுள்ள உண்மையை ஏழுவித யாப்பினுல் இதைக் கூறினேன். வேறு வேறு கடவுள் உண்டென்று ஒப்பாமல், ஒன்றே பொருள் என்றறிந்த சமரச ஞானிகள் மனதுக்கு இது மகிழ்வுதரும். ஒரு சமயவாதிகள் ஏழு பகுதியையும் சமமாகப் போற்ற இசையார் என்பதாம்.

உ
ஸ்ரீமந் நாராயணாய நம:

## பொய்கைப்பாக்கம்

# திருமால் பதிகம்.

### காப்பு - வெண்பா.

பொய்கைப்பாக் கத்துப் புருடோத் தமனே!நின்
செய்கைஒரு வேதியனுற் றேறினேன் - உய்கை
அடியார் பலர்க்குநல்கி ஆன்ற பறவைக்
கொடியாண்மை காட்டக் குறி.

கருத்து: பொய்கைப்பாக்கம் என்ற பெயருள்ள பதியில் எழுந்தருளிய திருமாலே! உனது திருவருளின் பெருமையை, ஒரு அந்தணர் மூலமாக அறிந்தேன். அதற்கேற்றவாறு, ஆன்ம ஈடேற்றத்தை அன்பர்கட்குத் தந்து, மேலான உனது வாகனமாயுள்ள கருடாழ்வாரது போற்றலை உலகறியும்படி செய்யத் திருவுளங்கொள்ளவேண்டும் என்பதாம்.

### நூல்

என்றமிழ் வேட்டதால் இனிய தொண்டனை
இன்றனுப் பியஅரிக்(கு) இனிய தாம்இடம்
குன்றவில் லான்எனக் குலவும் சித்தர்தாம்
பொன்றலில் லார்புகழ் பொய்கைப் பாக்கமே. 1

எனது துதிப்பாடலை விரும்பியதால், தன் அன்பன் ஒருவனை என்னிடம் அனுப்பிக்கேட்ட திருமால் உறையுமிடமாவது, மலை வில்லினையுடைய சிவன் போன்ற பெருஞ் சித்தர்களுடைய அழியாப் புகழ்பெற்றவர் புகழும் பொய்கைப்பாக்கமாகும். பொன்றல் இலார்-சிறப்பற்றவர். சித்தர்கள் சிவ வேடமுடனிருப்பவர்கள் என்பதாம்.

தாமநா பியல்வளர் சதுமு கத்தினன்
நேமமத் தனையையும் நிறுவு வான்இடம்
காமனை யீன்றவள் கண்டு நாணஎழிற்
பூமகள் முகம்புரை பொய்கைப் பாக்கமே. 2

தனது உந்தித் தாமரையில் தோன்றிய பிரமதேவனுடைய நியமம் (வினைப் பயன்) எல்லாவற்றையும் திட்டப்படி நடத்தச்செய்யும் திருமால் எழுந்தருளி யுள்ள இடமாவது, மன்மதனைப்பெற்ற திருமகள் கண்டு நாணும்படி, பூமி தேவியின் திருமுகம்போன்ற அழகிய பொய்கைப்பாக்கமேயாகும். தாமநாபி- பூவிதழ்போன்ற நாபி.

கன்மமே பொருளெனக் கழறும் பாவலர்
வன்மனத் திடைபகர் மாயன் வாழ்இடம்
நன்மகத் துவம்பல நாடு வார்மகிழ்
பொன்மகள் வாழ்வுறும் பொய்கைப் பாக்கமே. 3

கருமம், அதாவது அவரவர் செய்யும் செயலுக்கேற்பப் பலன் (இதைத் தருதற்குக் கடவுள் வேண்டாம்) என்பவர்கள், அன்புக்கு மாறுபட்டவராவர். அவர் பாவலராயினும் பாராட்டத்தக்கவரல்லர். அவர் உள்ளத்தில் அருளிராது. ஆகவே திருமால் தங்கமாட்டார். அத்தகைய மால் உள்ள தலம், நல்ல தெய்வீகத் திருவருளை விரும்புமன்பர் களிக்கும்படி திருமகளருளான செல்வ மிக்க பொய்கைப்பாக்கமாகும். பொன்மகள்—திருமகள்.

நிலவணி சடைப்பிரான் நிரப்பு நீக்கியே
இலகுவெண் கயிலையில் இருத்தி ஞன்இடம்
மலஇருள் துறக்கவே வாஞ்சை கொள்ளுமெய்ப்
புலவர்பற் பலர்வரு பொய்கைப் பாக்கமே. 4

சந்திரப்பிறையைச் சடையில் அணிந்த உருத்திரனது வறுமையை அகற்றி, விளக்கமான கயிலையில் இருக்கச்செய்த திருமால் வாழும் இடமாவது. ஆணவ முதலான மும்மலங்களறும்படி தவம்புரியும் உண்மையறிவாளர் பலர் வாழும் சிறப்புடைய பொய்கைப்பாக்கமாகும். நிரப்பு—வறுமை; பிச்சை எடுத்தனர் என்பதை விளக்கினர். இது புராண வரலாற்றுமுறை. சிவவேடமுள்ள உருத்திரர்கள் பதினெருகோடி யாதலால், ஆதி சிவபிரானைக் குறிக்காது என்க. தலைமைப்பொருள் ஒன்று. அது சிவன். அந்த சாரூபம் பெற்றுள்ளவர் பலர். அந்தந்தப் புவனத்தில் அந்தந்த உருவுடனிருப்பர். இது மூன்ருவதான யோக நிலையின் முடிந்தநிலை என்பர்.

சங்கரன், நான்முகன், சலசை, வாழ்வதற்(கு)
அங்கமே இடமென அருளி ஞன்இடம்
செங்கழு நீர்த்தடத் திரைத்தெண் ணீர்க்குளிர்ப்
பொங்கரிற் குயில்பயில் பொய்கைப் பாக்கமே. 5

உருத்திரன், பிரமன், திருமகள் இம்மூவரையும் வாழும்படி தனது திருமேனியில் இடம் உதவிய திருமால் வீற்றருளும் தலமாவது, செங்கழு நீர் விளங்கும் விசாலமான நீர்வளமிக்க வாவிகளையும், சோலைகளையும், அங்கு குயில் இசை செய்வதுமான பொய்கைப்பாக்கப் பதியாகும். ஒரு மூர்த்தியைச் சிறப்பிக்கும்போது மற்ருென்றை அதன் அங்கமாகக் கூறுவது வரலாற்றுமுறை.

ஆசுரக் குலமுழு தழியக் கொன்றுமெய்த்
தேசுறும் ஒருவனைச் செயவல் லான்இடம்
காசுதீர் மறைமொழி கற்றுப் போற்றிடும்
பூசுரர் குலம்பொலி பொய்கைப் பாக்கமே. 6

அசுரர்களையழித்து, உண்மையன்பனுன விபீடணனை உண்டாக்கிய திருமால் வாழும் தலமாவது, குற்றமற்ற வேத வாக்கியங்கள் கற்றறிந்து ஓதுகின்ற அந்தணர்கள் மரபு சிறந்துள்ள பொய்கைப்பாக்கமாகும். காசு–குற்றம். பூசுரர்–அந்தணர். ஆசுரர் என்பது அசுரரென்பதன் திரிபு.

கண்டபல் கனவினுற் கருதும் பேறெலாம்
அண்டரும் வியப்புற அருளும் மால்இடம்
வெண்டகை செந்தகை எனவி ளங்கெழிற்
புண்டரி கத்தடம் பொய்கைப் பாக்கமே. 7

தனக்குப் பலவித கனவுக் காட்சிகளை உதவி, அது உண்மையாகப் பலித்து, தேவரும் வியக்கும்படி செய்யும் திருமால் வாழ்வதான தலமாவது, வெண்ணிறமும், செந்நிறமும் ஆகிய தாமரை மலர் நிறைந்து விளங்கும் பொய்கைப்பாக்கமாகும். புண்டரிகம்–தாமரை. கனவைப் பொய்யென்பவர் பலர். ஆண்டாள் முதலியோர் கண்ட கனவுபோல, அநுபவமாக்க வேண்டுமென்பது கருத்து.

அத்தியைக் காப்பதற்(கு) அடற்க ராவினைக்
கைத்திகி ரியிற்செறும் கருணைக் காரிடம்
எத்திறத் தினும்ஒரே இலக்க தாமுதல்
புத்தியுள் ளார்வளர் பொய்கைப் பாக்கமே. 8

கஜேந்திரனுன யானையை முதலை வாயிலிருந்தும் விடுபடும்படி சக்கரப் படையால் அழித்த திருமால் வாழும் தலமாவது, எப்படியும் ஒரே கருத்து (தெய்வம் ஒன்றே என்பதை) உடைய சமரச ஞானிகள் வாழ்வதான பொய்கைப்பாக்கமாகும். அத்தி–யானை.

இரணியன் தன்னையட்(டு) இளமைச் சேயினைச்
சரணிடத் தமைத்தருள் தலைவன் தங்கிடம்
மூரணியா தழியினும் முழுக்கு றைத்தகைப்
புரணிலை கருதினர் பொய்கைப் பாக்கமே. 9

இரணியனை அழித்து, இளம்பருவமுள்ள பிரகலாதனைத் தன் தொண்டனுக ஏற்றுள்ள தலைவன் வசிக்கும் தலமாவது, எது மாறுபட்டாலும் முன்னைய தவப்பயனுல் தான்கொண்ட ஒரு கடவுளின் பூரணமான முழு நிலையை அடைந்தவர்கள் வாழ்வதான பொய்கைப்பாக்கமே. பூரண நிலையடைந்தவர் வேறு ஒரு தெய்வத்தை இகழார் என்பதாம்.

குருகையூர் வருசட கோபன் ஆதியர்
இருகைவே ழத்திரட் கினியன் வாழ்இடம்
முருகவேள் வருதட மென்ன மொய்யொடு
பொருகயல் மலிதெணீர்ப் பொய்கைப் பாக்கமே. 10

திருக்குருகூர்ச் சடகோபாழ்வார் ம் ன்று யானையொத்த பெரிய ஞானிகள் கூட்டத்துக்கு இனிய திருமால் வசிப்பதான தலம், முருகன் உதித்த சரவணப் பொய்கைபோல் வண்டுகளும், மீன்களும் உலவும் தெளிந்த நீருடைய பொய்கைப்பாக்கம்.

பங்கயா னனத்திரு பழகு மார்புடைப்
புங்கவன் அருள்மலி பொய்கைப் பாக்கத்தைத்
துங்கமா தையில்ஒரு தொண்டன் சொல்லிவை
மங்கள முழுமையும் வழங்க வல்லவே. 11

தாமரைத் திருமகள் வாழுமிடமான மார்புள்ள புனிதத்திருமால் அருள் மிக்க பொய்கைப்பாக்கத்தைத் திருவாமாத்தூரில் உள்ள ஒரு தொண்டன் (நூலாசிரிய சுவாமிகள்) பாடிய இப்பாடல்கள், படிப்பவர்களுக்கு சகல நலமும் தரவல்லதாகும் என்பதாம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

முற்றிற்று.



ஹனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்